திருவள்ளுவராண்டு 2035 சித்திரை



ரூ. 3.50

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்



புத்தாண்டுத் தோரண வாயிலாம் சித்திரைப்
புண்ணியத் திங்களை நண்ணி மகிழ்ந்தோம்;
வித்தை, மொழி, கலை, பண்பு செழித்து
விண்ணக வாழ்க்கை இம் மண்ணில் மலர்க!

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2035 (சுபானு) மாதம் : சித்திரை

மலர் : 16 இதழ் : 4


## நமது கடமையும் உரிமையும்!

நாடாளுமன்றத் தேர்தல் நம்மை நோக்கி நகர்ந்து வந்து கொண்டிருக்கிறது. கோடையின் வெப்பத்தை விட தேர்தல் பிரசாரத்தின் வெப்பம் மிகக் கடுமையாக உள்ளது. 100 கோடி ஜனத்தொகையை எட்டிப் பிடித்து, பத்து ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறிவிட்ட பாரதத்தில் இன்னமும் வறுமை வாழ்ந்து கொண்டிருக்கின்றது. பள்ளத்தை நோக்கிப் பாயும் நீரைப் போல திட்டத்தின் பயன்கள் அனைத்தும் எல்லா மக்களையும் சென்று சேர வேண்டும். "All for one, one for all, ஒருவர் எல்லோருக்காகவும், எல்லோரும் ஒருவருக்காவும்" என்பது மக்களாட்சித் தத்துவத்தின் மகத்துவம். இந்த மகத்துவத்தை வழங்கும் உண்மையான அதிகாரம் தான் வாக்குரிமை.

பதினெட்டு வயதை அடைந்துவிட்டால் வாக்களிக்கும் தகுதி வருகின்றது என்பது பதினெட்டு வயதை அடைந்து விட்டால் மீசை முளைப்பது போல இயல்பான நிகழ்வு அல்ல, ஜனநாயக மாளிகையின் சுவரை எழுப்புவதற்கு, ஒவ்வொரு செங்கல்லையும் எடுத்துவைக்கும் தார்மீக உரிமை எல்லோருக்கும் இயல்பாக வந்துவிடுகின்றது என்று தான் பொருள்!



எல்லோரும் ஓர்குலம்
எல்லோரும் ஓர் நிறை
எல்லோரும் ஓர் விலை

என்ற மக்களாட்சி மகத்துவமாகிய சமத்துவத்தைப் பறைசாற்றும் உரிமை தான் - எல்லோரும் சமவலிமை உடைய வாக்குரிமைதான், சாதி, மத, மொழி, இன, நிற வேறுபாடு இன்றி அனைவருக்கும் வழங்கப்பட்டுள்ளது. ஆட்சியாளரைத் தேர்ந்தெடுப்பதில் வழங்கப்பட்ட சமபங்களிப்புதான் வாக்குரிமை. இதை எல்லோரும் முறையாகப் பயன்படுத்துகின்றார்களா என்றால், அதுதான் கேள்விக்குரியதாக உள்ளது.

பெரும்பாலும் அறிவு ஜீவிகளும், செல்வர்களும் வாக்குச் சாவடிக்குச் செல்வதையே தவிர்த்து விடுகின்றனர். மக்களாட்சி நடைபெறும் நாட்டில் அரசியல் என்பது கட்சிகளின் கொள்கை பிரச்சாரம் அல்ல; தேசத்தின் சமூக பொருளாதார விஞ்ஞானம். அறிவு ஜீவிகளும் சான்றோர்களும் அரசியல் என்றால் அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கவே விரும்புவதில்லை; வாக்குச் சாவடிகளுக்கு சென்று வாக்களிக்கக் கூட விரும்புவதில்லை; செல்வர்கள் நிலையும் அதுதான்! தேனில் விழுந்த ஈயைப் போல நடுத்தட்டு வர்க்கத்தினர் நுகர்வுக் கலாச்சாரத்தில் மயங்கிக் கிடக்கின்றார்கள். இன்னமும் இந்தத் தேசம் இனாம்களையும் இலவசங்களையும் நம்பிக் கிடக்கின்றது. நமது மகாசந்நிதானம் குறிப்பிடுவார்களே; "தூறல்களால் பயிர் விளைந்து விடாது, இலவசங்களால் இனாம்களால் ஒரு நாடு முன்னேறாது".

ஒரு அரசன் தன் ஆலோசகர்களை அழைத்து, உலகம் தோன்றிய நாள்முதல் தொன்று தொட்டு வரும் ஞானம் முழுவதையும் ஒரே வரியில் எழுதிவரச் சொன்னான். அப்பொழுது கிடைத்த ஒரே பதில், "இங்கு இலவச உணவு இல்லை" என்பதே.

தேசத்தின் எந்தப் பிரச்சனையையும், சிக்கலையும், சாதி மத, இன, கட்சி கண்ணோட்டங்களை விட்டு விட்டு, "மக்கள் நலம்" என்ற ஒரே உருப்பெருக்கியின் வழியாகவே உற்றுப் பார்க்கப்பட வேண்டும்.

உணவுப் பங்கீட்டுக் கடையின் வரிசையிலும் நீண்ட நேரத்தைச் செலவழிக்கின்ற நாம், திரை அரங்கின் முன் பொழுதுபோக்குக்கு நீண்ட நெடிய வரிசையிலும், நேரத்தை தொலைக்கின்ற நாம், வீண் அரட்டையில் நேரத்தை வீணாக்குகின்ற நாம், நம்மை ஆள்பவர்களைத் தேர்ந்தெடுக்கும் தார்மீக கடமைக்குச் சில மணித்துளிகளைச் செலவழிக்கக் கூடாதா? வாக்களிப்பது அனைவரின் கடமையும் உரிமையும் ஆகும்.

"கள்ள வாக்குகள் பலவீனத்தின் அடையாளம்
செல்லாத வாக்குகள் அறிவீனத்தின் அடையாளம்"

இரண்டையும் தவிர்க்க, எல்லோரும் வாக்குச் சாவடிக்குச் சென்று சுதந்திர உணர்வுடன் தங்கள் கடமையை நிறைவேற்றவேண்டும்.

உழைப்பு, உடலுக்கு உறுதி சேர்க்கும். அறிவு வளர்ச்சிக்கும் உதவும். இந்த உலகில் பலவற்றிற்கு எல்லை உண்டு. ஆனால், அறிவுக்கும் ஆளுமை நிறைந்த உழைக்கும் சக்திக்கும் எல்லையே கிடையாது. மூளை இயங்க, இயங்க அறிவு வளரும். உழைப்பு தொடர்ந்து இடையீடின்றி நிகழின் உழைக்கும் சக்தியும் வளரும்.

-அருள்நெறித்தந்தை

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 38. ஊழ்

உயிர்கள் தமது செயல்களின் பயனை அடைந்து அனுபவிக்கும்படி செய்யும் நியதிக்கு ஊழ் என்று பெயர். அதாவது செடிகளில், மரங்களில் மலர்கள் ஊழ்த்து வெளிப்படுவதைப் போல ஒருவருடைய இன்ப துன்பங்கள் அவருடைய வாழ்க்கையிலிருந்து ஊழ்த்து உருவாகி வெளிப்படுகிறது என்பது கருத்து. செயல் என்று பொதுவாகக் கூறினாலும் சிந்தனை, எண்ணம், செயல்கள், செயல்களின் உள்நோக்கம் முதலியனவும் அடங்கும். அதாவது ஓருயிர் ஒன்றினைப் பற்றி எண்ணும்பொழுது அந்த எண்ணமே பரிணமித்து வளர்க்கும் அல்லது அழிக்கும். ஒருவன் ஆக்கத்திற்கும் அழிவிற்கும் புறச்சூழல் காரணமன்று. அவரவர்தம் எண்ணங்களும் எண்ணங்கள் வழிப்பட்ட செயல்களுமே காரணம். ஊழ் என்பது அவரவர்தம் படைப்பேயாதலால் அதனைத் தடம் மாற்றவோ மாற்றி அமைக்கவோ மனிதனால் முடியும். ஆனாலும் பழக்கங்களின் வழிப்பட்டவர்கள் பழக்கங்களினின்றும் விடுதலை பெறமாட்டார்கள். அதனால் ஊழ் வலிமையாகிவிடுகிறது. நாளும் சிந்தித்துப் பழக்கங்களை மாற்றிக் கொள்ளும் இயல்பினருக்கு ஊழினை மாற்றும் ஆற்றல் இருக்கும். ஆனால், சென்ற கால மனிதகுல வரலாற்றில் ஊழின் ஆற்றல் மிகைப்படுத்தப்பெற்று மனிதர்கள் ஊழிற்கு அடிமையாக்கப் பட்டுள்ளனர். காலப்போக்கில் இந்த ஊழின் தத்துவத்தைப் பயன்படுத்திச் சுரண்டும் வர்க்கமும், இந்த வர்க்கத்திற்குத் துணைபோகும் சமய போதகர்களும் கொழுத்து வளர்ந்துள்ளனர். மக்களிடையில் அறியாமையும் வறுமையும் வளர்ந்தது. இந்தச் சூழ்நிலையில்தான் ஊழினை நம்பாக் கொள்கை தோன்றியது.

ஊழ் உண்டு, அது புறத்தது அல்ல. அது மனிதரில் தனிமைப்படுத்தப்பட்ட ஆற்றல் அல்ல. மனிதரின் எண்ணங்களும் செயல்களும் பழக்கங்களுமே ஊழாகின்றன. நாள்தோறும்

தன்னுடைய வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கித் தவறுகளைத் திருத்திக்கொண்டு வாழும் இயல்பினருக்கு ஊழ் உறுதுணை செய்யும்.

*ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்*
*போகூழால் தோன்றும் மடி.* (371)

நல்லூழால் முயற்சி தோன்றும். கையில் உள்ள பொருளை இழத்தற்குரிய தீயூழால் சோம்பல் தோன்றும்.

தோன்றும் : காணப்படும்; விளங்கித் தோன்றும் என்றும் பொருள் கொள்ளலாம்.

இங்ஙனம் பொருள் கொண்டால் ஒருவரிடத்தில் உள்ள முயற்சி நல்லூழையும், சோம்பல் தீயூழையும் காட்டும் என்றும் கொள்ளலாம். இதுவே அறிவியலுக்கு இசைந்த கருத்து.

*பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்*
*ஆகலூழ் உற்றக் கடை.* (372)

ஒருவன் தன் செல்வத்தை இழத்தற்குரிய தீயூழ் வந்துற்றபோது அவனைப் பேதையாக்கும். அவனுக்குச் செல்வம் சேர்வதற்கேற்ற நல்லூழ் வந்துற்றபோது அவன் இயல்பில் பேதையாயிருந்தாலும் அறிஞனாக்கும்.

அறிவு என்பது நாள்தோறும் பெறுவது; பேணி வளர்க்கப் பெறுவது. செயல்வழி அனைத்திலும் வாழ்க்கையில் நாள்தோறும் பெறும் அனுபவங்கள் பட்டறிவாக வளர்கின்றன. இத்தகு அறிவுப் பயன்பாட்டினை அடையாமல் வறிதே வாழ்வோர் பேதையாதல் எளிது. பேதைகள் எதையும் இழப்பர்; இருப்பதையும் இழப்பர். இதனை இழவூழ் என்பது சரி. அதுபோலவே வாழ்க்கையின் ஒவ்வோர் அடியிலும், அறிவார்ந்த பயனடையத் தக்கவகையில் உணர்வுடன் வாழ்வோர் எதையும் அடைவர். இது ஆகலூழ்.

காரண, காரியத்தினைக் கண்டறிவதில் உரை வேறுபடுகிறது. பேதைப்படுத்துதல் இழவூழுக்குக் காரணம். இழவூழினால் பேதைப்படுதல் இல்லை. ஊழ், உயிர்ப்புள்ள ஒன்றல்ல. உயிர், உயிர்ப்புள்ள ஒன்று. "உயிர்ப்பு" முறையாக இயங்கினால் எதையும் மாற்றும்; செய்யும். இது அறிவியல் கற்றுத் தரும் பாடம் மட்டுமன்று; வரலாறு கற்றுத்தரும் பாடமுமாம்.

*நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்*
*உண்மை அறிவே மிகும்.* (373)

ஒருவன், நுண்ணிய பொருள்களை உணர்த்தும் பல நூல்களைக் கற்றாலும் அவனுடைய உண்மை அறிவே மிகும்.

"கற்பினும்" என்றதால் கற்றவர் என்றாயிற்று. கற்றலே அறிவுடைமையைத் தராது என்ற கருத்து திருவள்ளுவருக்கு உண்டு. ஆதலால், கற்ற நூலின் கருத்தைச் செயற்பாட்டுக்குக் கொண்டுவரும் பொழுது அறிவு தோன்றுகிறது. இந்த அறிவுதான் வாழ்க்கையில் செயற்படும்.

*இருவேறு உலகத்து இயற்கை திருவேறு*
*தெள்ளிய ராதலும் வேறு.* (374)

இருவேறு உலகமாக உலகத்தியற்கை அமைந்துள்ளது. அதாவது செல்வராதல், தெள்ளிய அறிஞராதல் என்ற இருவேறு நிலை.

"உலகத்து இயற்கை" - என்றதால் இந்த இருவேறு நிலை மாற்றத்திற்குரியது என்றுணர்த்தியவாறு.

இன்று தொழில்நுட்பம் உடையார் மாட்டுச் செல்வம் இல்லை. செல்வம் உடையார் மாட்டுத் தொழில் நுட்பம் இல்லை. இன்று தொழில் நுட்பமும் அறிவும் விற்பனைப் பொருளாக, பிழைப்புக் கருதி விற்கப்படும் பொருளாக மாறிவிட்டது. இன்று எந்த விஞ்ஞானியும் கோடீசுவரன் இல்லை. இது மானிடச் சாதியின் இழிநிலையைக் காட்டுகிறது.

*நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்*
*நல்லவாம் செல்வம் செயற்கு.* (375)

செல்வம் தேடுவதற்கு நல்லவை எல்லாம் தீயவாம். தீயவும் நல்லவையாம்.

ஊழின் காரணமாக நல்லது தீயதாதலும், தீயது நல்லதாதலும் ஆம் என்று கூறுகிறது.

இன்றைய சமுதாய அமைப்பில் செல்வம் தேடும் முயற்சிக்குத் தடையாக நன்னெறிகள் உள்ளன. தீயனவெல்லாம் நன்னெறியாக உள்ளன. அதாவது,

ஊழல் நிறைந்த சமுதாயமாக இருப்பதால் நன்னெறியில் நின்று ஒழுகினால் பொருள் ஈட்டமுடியாது. தீநெறிகளைப் பற்றுக் கோடாகக் கொண்டொழுகினால் செல்வத்தைச் சேர்க்கலாம்.

இஃது உலகியலின் தவறான செயல்முறையைக் கடிந்தது.

*பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்*
*சொரியினும் போகா தம.* (376)

உழைப்பின் வழி அமைந்த நல்லூழால் வந்தமைந்த பொருள்கள், எப்போதும் நீங்கா. உழைப்பால் அமைந்த நல்லூழின் வழி வந்தடையாத - உரிமையல்லாத் பொருள்கள் வருந்திக் காப்பினும் நில்லா.

உழைப்பே ஊழாகிறது. ஊழே உழைப்பாகிறது. இந்தச் சுழற்சி முறையிலேயே உரிமை கால் கொள்கிறது.

*வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.* (377)

செல்வத்தைத் தேடியவன் வகுத்த வழியிலல்லாமல் கோடி தொகுத்தவர்க்கும் துய்த்தல் அரிது.

ஊழை, வகுத்தான் என்றும் தெய்வம் என்றும் கூறுதல் ஏற்புடைத்தன்று.

ஒருவனின் பழக்கங்களே ஊழாக, ஊழ்த்து வருவதால் ஊழினை மனிதனில் வேறுபட்டதாகவும் ஆற்றலுடையதாகவும் கூறுதல் பொருந்தாது.

பொருளைச் சேர்ப்பவர்களுக்கும் கூட, நோக்கங்கள் உண்டு. அந்த நோக்கங்கள் வகையில்தான் செல்வத்தைத் துய்ப்பர். சில கோடீசுவரர்கள் தாம் எளிய வாழ்க்கையை மேற்கொண்டு, தொண்டுக்குத் தமது பொருளைச் செலவழிப்பதையும் காண்கிறோம். ஒருசிலர், பக்கத்தில் உள்ளவர்களைப் பற்றிக்கூடக் கவலைப்படாமல் தாமே சுக போகத்தில் வாழ்வதையும் காண்கின்றோம். இஃது அவரவர்களும் வகுத்துக்கொண்ட கோட்பாடு.

சிலர், படைப்புப் பொருள்களாகிய உடை, செருப்பு அவற்றைப் படைத்த நோக்கத்தின் வகையிலேயே பயன்படுத்தப்படும் என்று கூறுவர்.

இது திருக்குறளின் பெருமைக்கு ஏற்ற உரையன்று.

*துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால*
*ஊட்டா கழியும் எனின்.* (378)

வேண்டிய துன்பங்களை அடைவிக்காது தீயூழ் நீங்குமாயின், வறுமையின் காரணமாக நுகர்ச்சி இல்லாதார் துறப்பர்.

வறுமையின் வழித் துறத்தல் இயற்கையிலமைந்த துறவன்று.

*நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்*
*அல்லற் படுவ தெவன்.* (379)

நல்லன விளையும் பொழுது நல்லன என்று ஒதுக்காது அனுபவிப்பவர்கள், தீயன விளையும்பொழுது அங்ஙனமே அனுபவிக்காது அல்லற்படுவது ஏன்?

ஒருவன், தன்னுடைய செயல்களின் வழி நன்மையை அடைய விரும்புகின்றனன். அங்ஙனமே தீமையை விரும்பாதது ஏன்? தாம் செய்த செயல்களின் நன்மையை நுகர்வது போலவே தீமையை நுகர்தல் கடமையன்றோ!

*ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று*
*சூழினுந் தான்முந் துறும்.* (380)

ஊழைப் போல மிகுந்த வலிமையுள்ளவை வேறு எவை உள்ளன? அந்த ஊழினை விலக்குதற்கு வேறு ஒரு வழியை ஆய்ந்து எண்ணினும் ஆங்கு அவ்வழியிலும் முற்பட்டு வந்து நிற்கும்.

"முந்துறும்" என்றதனால் ஊழிற்கு வெற்றி கிடைக்கும் என்பது உறுதிப்படுத்தப் பெறவில்லை.

(அறத்துப்பால் மூலமும் உரையும் முற்றும்)

## எதில் இருக்கிறது?

வாழ்த்தும் வாழ்த்திலில்லை - வாழ்வு
வாழும் முறையிலின்றி
ஓதும் வேதத்திலில்லை - உய்வு
உண்மை, உழைப்பிலின்றி
பாடும் பாட்டிலில்லை - பண்
பாவ ஒலியிலின்றி
தேடும் வெளியிலில்லை - தெய்வம்
தெளிந்த அறிவிலின்றி
பறக்கும் கொடியிலில்லை - வளர்ச்சி
பாரோர் நலத்திலின்றி
அமரும் ஆசனத்திலில்லை - பதவி
ஆளும் பண்பிலின்றி.

**-க. நாகேந்திரன்**
எஸ்.எஸ்கோட்டை

# அருளாலய மாமாங்கம்

(தமிழாகரர் **தெ. முருகசாமி,** காரைக்குடி)

பன்னிரண் டென்று சொன்னால்
பற்பல பன்னிரண் டெல்லாம்
மன்னிடும் ஒவ்வொன் றாக
மனத்தினில் வந்து தோன்றும்!
துன்னரும் மலையில் பூக்கும்
தும்பியுறாக் குறிஞ்சிப் பூதான்
பன்னரும் சிறப்பி னோடே
பன்னிரண் டாண்டில் பூக்கும்!

பன்னிரண் டாண்டில் பூக்கும்
பலரறி குறிஞ்சிப் பூப்போல்
பன்னிரண் டாண்டில் தோன்றும்
பலர்புகழ் மாமாங் கம்மே!
பன்னிரு மாதம் தன்னைப்
பகருமோர் ஆண்டைப் போலப்
பன்னிரு ராசி தம்மைப்
பகர்வரே பொருத்த மாக!

பன்னிரு நூற்பா என்னும்
பகர்சிவ ஞான போதம்
பன்னிரு திருமுறை யோடே
பலருமே எண்ணிப் பார்ப்பர்!
பன்னிரு பொருள்க ளான
பலவற்றை டசனென் பார்கள்!
பன்னிரு எண்ணின் மேலாய்ப்
பகலிரவு மணிதான் உண்டோ?

பார்புகழ் ஆழ்வார் தாமும்
பன்னிரு பேர்கள் போலப்
பார்புகழ் ஏசு வுக்கும்
பன்னிரு சீடர் என்றே
பார்புகழ் இந்த ஆண்டில்
படர்ந்திட்ட மாமாங் கத்தால்
பார்புகழ் குடந்தை தன்னில்
பலர்தீர்த்தம் ஆடி னாரே!

காவிரி யாற்றில் தானும்
கணத்தநீர் ஈராண் டாகத்
தாவியே ஓடா நிலையில்
தவித்திட்ட பயிர்கள் எல்லாம்
சாவியாய்ப் போனா லும்மே
சனங்கள்தான் தீர்த்தம் ஆடக்
கூவியே கும்ப கோணம்
குவிந்தனர் பாவம் போக்க!

கங்கையில் ஆடி னாலும்
காவிரி ஆடி னாலும்
பொங்குபல பாவத் தோடே
போதையாய் புன்மை எல்லாம்
தங்குதடை யின்றி நாளும்
தாங்கொணா தாகச் செய்தால்
கங்குகரை யில்லாப் பாவம்
காலமும் சாரா தோதான்!

என்கின்ற பொருளில் சான்றோர்
இயம்பிய கருத்தில், எண்ணம்
ஒன்றினால் பாவந் தானும்
ஒண்டாது என்ப தாலே
பன்னிரு மாமாங் கத்தில்
படிந்தெவரும் குளிக்க வேண்டா!
என்பதுவே உண்மை என்று,
எடுத்தியம்பத் தேவை யில்லை!

ஏனென்று கூறு தற்கு,
இயம்புவேன் கேளீர் ஒன்றை!
மானொன்றன் பின்னே ஓடி
மயங்கிய இராமன் ஓர்நாள்
தான்வந்து கங்கை தன்னில்
தலைமுழ்கிக் குளித்த போது
தேனென்று மகிழ்ந்த கங்கை
தெவிட்டாமல் சொன்னது ஒன்று!

தாகத்தைத் தீர்த்துக் கொள்ளத்
தனைவந்து எவரும் நாடார்,
பாவத்தைப் போக்கு தற்கே
பலர்வந்து என்னை நாடி
ஆவலாய்க் குளித்து, எல்லா
அசடையும் விட்டுச் செல்லப்
பாவத்தைச் சுமந்தேன் அந்தப்
பரிவினைப் போக்க அந்தோ;

யார்வந்து காப்பார் என்றே
எதிர்பார்த் திருந்த போது
நீர்வந்து குளித்த தாலே
நிம்மதி யுற்றே னென்று,
நீர்கங்கை சொன்ன தைப்போல்
நிகழ்ந்திட்ட கும்ப கோணம்
பேர்பெற்ற மாமாங் கத்தின்
பெரும்பாவம் யாரால் போச்சோ?

அனைவரும் வந்து வந்து
அருங்குளம் குளித்த தாலே
பனையளவு பாவம் எல்லாம்
பஞ்சுபோல் பறந்த தாக
மனையில்வாழ் மக்க ளெல்லாம்
மனதார எண்ணி னாலும்
தினையளவு தீரா தந்தோ
திரும்பவுமே தீமை செய்தால்!

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# புதிய காற்று இதழுக்கான நேர்காணலின்போது தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களின் பேட்டி

❖ *நாயன்மார்களின் வரலாற்றைப் பார்த்தால் ஒவ்வொருவரும் அவரவர் விருப்பப்படி இறைவனை வழிபட்டிருப்பது தெரிகிறது. இறைவனும் சைவம், அசைவம் என எல்லா வழிபாட்டையும் ஏற்றுக்கொண்டதாகவே தெரிகிறது. ஆனால் இன்றைக்கு கோவில்களில் ஆடு, கோழிகளை பலியிட தடை வந்திருக்கிறதே இது இறைநெறிக்கு மாற்றமில்லையா?*



ஏற்றுக்கொண்ட லட்சியங்களை எந்தச் சூழ்நிலையிலும் விட்டு விலகாதவர்கள் என்பதுதான் நாயன்மார்களின் தனிச்சிறப்பு. கண்ணை தானம் செய்வது, இறைவனுக்கு இரத்தத்தைத் தானம் செய்வது என்பதெல்லாம் வழிபாட்டில் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டுகிறது. வழிபாடு என்பது வெறும் சடங்குவயப்பட்டதல்ல. உணர்வு வயப்பட்டது. வழிபாடு என்பது அறிவு வயப்பட்டது அதையும் தாண்டி அன்பு வயப்பட்டது. என்பதை அறிவுறுத்துவதற்குத்தான் அந்த அருளாளர்கள் கண்ணை தானம் செய்ததும், பிற தானங்களை செய்ததும், எப்படி பூஜிக்கவேண்டும் பூஜா முறைகள் தெரியாதவர், மந்திரங்கள் தெரியாதவர். ஆனால் இறைவனை பூஜிப்பதற்கு கண்ணை; தேவைப்பட்டால் உயிரைக் கூட தருவதற்கு தயாராக இருப்பது தான்.

அந்த வழிபாடு நியாயமானது என்று வலியுறுத்தவில்லை. வழிபாட்டிற்கு தேவையானது வெறும் சடங்குத்தன்மையல்ல. இறைவனை நேசிப்பதுபோல் உயிர்களை நேசிக்கின்ற அன்புத் துடிப்பு வழிபாட்டில் வரவேண்டும் என்பதுதான் கண்ணப்பர் வரலாறும் அவரைப் போன்ற அருளாளர்களின் வரலாறும் நமக்கு உணர்த்துகின்ற உட்கிடக்கை, எனவே சமயத்தின் பெயரால் கடவுளின் பெயரால் எந்த

உயிரையும் பலிகொடுப்பது என்பது உயிர்க்குல நேயத்திற்கு உகந்ததாக இல்லை. இதை சட்டம் மூலம் செய்வதைவிடவும் மனமாற்றத்தின் மூலம் சாதிக்கலாம்.

❖ *மதங்களின் பெயரால் உருவாகின்ற மோதல்களைத் தடுப்பதற்கு ஒவ்வொரு மதத்திற்குள்ளும் இருக்கின்ற ஜனநாயக சக்திகளை அணி திரட்டவேண்டும் என்ற கருத்து சிந்தனை உலகில் முன் வைக்கப்படுகிறது. என்ன நினைக்கிறீர்கள்?*

மதத்திற்குள் ஜனநாயக சக்திகள் என்பதே ஒரு புதிய சொல்லாடலாக்கப்படுகிறது. உண்மையான சமயமாக இருந்தால் அது முழுமையான ஜனநாயகம்தான். நான் என்னுடைய வழிபாட்டில் நம்பிக்கை உடையவனாக இருக்கிறேன். பிறருடைய வழிபாட்டு நெறிமுறைகளில் நான் குறுக்கிடாதவனாக இருக்க விரும்புகிறேன்.

நபிகள் பெருமகனார் அவர்களைச் சந்திக்க கிறிஸ்தவ அருட் சகோதரர்கள் வந்தபொழுது ஒரு குறிப்பிட்ட நேரம் வந்தவுடன் அருட் சகோதரர்கள் சிந்தனை வேறு திசையில் செல்கிறது. அதை கவனித்த நபிகள் பெருமகனார் என்ன காரணம் என்று கேட்டவுடன் அந்த அருட்சகோதரர்கள் தங்களுடைய வழிபாட்டு நேரமிது எனவே வேறு இடத்திற்குச் சென்று வழிபாடு செய்துவிட்டு வரலாமா என்று சிந்தித்துக் கொண்டிருப்பதாகக் கூறியபொழுது நபிகள் பெருமகனார் தான் இருந்த இடத்திலேயே அவர்களின் வழிபாட்டை நிகழ்த்தச் சொன்னார்கள். இது சமய நல்லிணக்கத்திற்கு, மிகப் பெரிய தத்துவத்திற்கு வழிகாட்டியாக இருக்கிறது. அதேபோல் இரண்டாம் கலீபாவான அருளாளர் உமர் அவர்கள் தனது ஆட்சிக் காலத்தில் ஜெரூசலம் சென்றபோது அவருக்குரிய வழிபாட்டு நேரம் வருகிறது. தான் நின்று கொண்டிருந்த கிறிஸ்தவ தேவாலயத்தில் வழிபாடு நடத்த வாய்ப்பு கொடுத்தபோது மறுத்துவிட்டு வேறொரு இடத்தில் திறந்த வெளியில் வழிபாட்டை நடத்திவிட்டு நான் இங்கு தேவாலயத்தில் வழிபாட்டை நிகழ்த்தி இருந்தால், எதிர்காலத்தில் உமர் இங்கு தொழுகை நடத்தினார் அதனால் இங்கு மசூதிதான் இருந்தது என்ற பிரச்சனை வந்துவிடக்கூடாது என்பதற்காகவே நான் இங்கு தொழுகை நிகழ்த்தவில்லை என்று கூறினார். இதுபோன்ற நிகழ்வுகள் எல்லா

அருளாளர்களின் வாழ்க்கையிலும் பலவித கட்டங்களில் வருகின்றன. ஆக அருளாளர்கள் சமய முரண்பாட்டை வளர்க்க விரும்பமாட்டார்கள். எல்லா சமயங்களிலும் ஒரு பொதுமையைக் காண விரும்புவார்கள். அதுதான் உண்மையான ஆன்மீகத்தின் பலம். நம்முடைய மகாசன்னிதானத்தின் காலத்தில் மண்டைக் காட்டில் மிகப்பெரிய மதக்கலவரம் தோன்றி அரசு எந்திரம் ஸ்தம்பித்து நின்றபொழுது தனி ஒரு மனிதராக சென்று சமய நல்லிணக்கப் பணியை, அமைதிப் பணியைத் தொடங்கி, போர்க்களத்தில் அமைதிப் பணியைத் தொடங்கியபொழுது அன்றையப் பேராயராக இருந்த ஆரோக்கியசாமி அவர்கள் குன்றக்குடி அடிகளாரோடு அதற்குப் பிறகு களத்தில் இறங்கி இரண்டுபேருமாக சேர்ந்து கிறிஸ்தவ இந்து சமய சகோதரர்களின் மோதலைத் தடுத்து நிறுத்தி இரண்டு மாதகாலம் தொடர்ந்து அமைதிப்பணியின் விளைவாக குமரி மாவட்டத்தில் அமைதி திரும்பியது. அதற்குப்பிறகு திருவருட்பேரவை என்கிற ஒரு இயக்கம் தோன்றியது. அது எல்லா சமய சகோதரர்களிடமும் நல்லிணக்கத்தை, நல்லுறவை வளர்ப்பது சமயங்களின் பெயரால் ஏற்படக்கூடிய வேறுபாடுகளில்லாத உறவுகளை மேம்படுத்துவது என்ற பணியை செய்து வருகிறது. அந்த அமைப்பு இப்பொழுதும் தொடர்ந்து நடைபெறுகிறது. அதனை வலிமைப்படுத்த வேண்டிய நேரமிது.

❖ *பொதுத்தன்மையை தேடுதல் என்ற பெயரில் தனித் தன்மைகள் அழிக்கப்பட்டு ஒற்றை மதம் என்ற கருத்தாக நிறுவப்படுகிறதோ?*

பொதுத்தன்மை என்பது எல்லா சமயங்களிலும் அடையாளம் காட்டப்படுவது. "ஒன்றேகுலம் ஒருவனே தேவன்" என்றால் ஒருவன் தான் ஆண்டவன். நான் வழிபடுகிறவன் தான் ஆண்டவன் என்பது இதற்கு பொருளல்ல. அப்படி சொல்பவர்கள் மக்களைத் தனிமைப் படுத்துபவர்கள் காட்டுவது. பிற சமயங்கள் காட்டினாலும் என்னுடைய சமயம் காட்டினாலும் எல்லா சமயங்களும் அடையாளம் காட்டுகிற அவன் ஒருவன்தான் என்ற நம்பிக்கை சமயத்தின் பொதுமைத் தன்மையில் அந்த நம்பிக்கையை வளர்ப்பது.

மதங்கள் மக்களைப் பக்குவப்படுத்துகின்ற முயற்சிகளை செய்திருக்கின்றன. அருளாளர்கள் தோன்றுகின்ற கால கட்டங்களில் அவை மகத்தான வீச்சை மக்களிடம் கொண்டு சென்றிருக்கின்றன. யேசுகிறிஸ்துவின் காலத்தில் ஒரு மகத்தான மறுமலர்ச்சி, நபிகள்

பெருமானார் காலத்தில் ஒரு மகத்தான மறுமலர்ச்சி, பின்னால் காலம் செல்லச் செல்ல அடுத்து வருகின்ற அருளாளர்கள் அந்த வீச்சில் மக்களிடம் பணியைக் கொண்டு சேர்க்கவில்லை. மிக வேகமாக மக்களிடம் கொண்டு சேர்ப்பதில் ஏற்பட்ட தொய்வு. மக்களிடம் புரிதலில் ஏற்பட்ட இடைவெளிகள் இவைகள் மிகப்பெரிய பின்னடைவை ஏற்படுத்திவிட்டன. ஆனால் உண்மையான ஆன்மீகத்தின் தளம் என்பது மக்களை குருக்ஷேத்திர போர்க்களமாக உருவாக்காது. உருவாக்கவும் கூடாது. உருவாக்கினால் அது நல்ல சமய நெறியாக மக்களை வழிகாட்டுகிற சமய நெறியாக இருக்க முடியாது.

❖ *மதமாற்றம் என்பது தலித் மக்களின் ஒரு போராட்ட ஆயுதம் அந்த ஆயுதத்தையும் அரசு சட்டத்தின் மூலம் தடுத்திருக்கிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?*

எந்த ஒரு அறத்தையும் சட்டமாக செய்வதைவிட அவர்களிடம் மனமாற்றத்தை விதைக்கலாம். மதமாற்றம் நிகழ்கிறது என்றால் அதன் அடித்தளமான ஆழமான காரணம் என்ன என்பதை எல்லா தரப்பினரும் புரிந்துகொண்டு அதை மாற்ற வேண்டும். நீங்கள் குறிப்பிடுகிற தீண்டாமை எந்த வடிவத்தில் இருந்தாலும் அது தடுக்கப்படவேண்டும். தீண்டாமை என்பது சமயத்தின் அடையாளத்தில் வருவதைவிட சமூகப்பழக்கத்தின் அடையாளத்தில் வருகிறது. இரட்டை டம்ளர் என்பதை எந்த சமயமும் வற்புறுத்தவில்லை. இரட்டை டம்ளரோ, தனிச்சுடுகாடோ அல்லது பொதுக்குளத்தை பயன்படுத்தா நிலையோ இன்றையச் சூழலில் இவையெல்லாம் சமயத்தின் மூலமாகக் கொண்டு வரப்படவில்லை. இவைக் கொண்டுவரப்படுவது சமூகத்தின் பழக்க வழக்கம். காலம் காலமாக ஊறிப்போயிருக்கிற அதையும் ஒரு மூடநம்பிக்கை என்று சொல்லலாம். மனிதர்களை அடிமைப்படுத்துவது என்பது ஒரு மூடநம்பிக்கை. நரபலியிடுவதைப் போல அது ஒரு மூடநம்பிக்கை. இந்த மூட நம்பிக்கையை அகற்றுவதற்கு எல்லா சமயத்தைச் சார்ந்தவர்களும் பாடுபடவேண்டும். ஆனால் மதமாற்றம் மட்டுமே சமூக அந்தஸ்தைத் தந்துவிடும் என்பதும் பல நேரங்களில் தவறாகப் போய்விடுகிறது. மதம் மாறிப் போனவர்கள் அங்கேயும் கூட அந்த மனித உரிமை மறுக்கப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்கிறார்கள்.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)...

ஸ்ரீ

# பெண் தெய்வ வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்
திருச்சிராப்பள்ளி)

முருகனை ஓரிடத்தில், "கொற்றவை சிறுவ" என்றழைக்கும் முருகாற்றுப்படை, மற்றோரிடத்தில் அவரை, "மலைமகள் மகனே" என்றும் விளிக்கிறது. இறைவன் உயிர்ப்பை விழுங்கிய கார்த்திகை மாதர் கருவுற முருகன் பிறந்தார் என்றும் கூறுகிறது. முருகன் கார்த்திகை மாதர் பயந்தவரென்பதை விளக்கமுறச் சொல்லும் பரிபாடல், மற்றோரிடத்தில் அவர் நீலகண்டருக்கும் மாசிலோளுக்கும் பிறந்தவர் என்கிறது. இந்த மாசிலோள், உமையா, கொற்றவையா என்பதில் தெளிவில்லை. முருகனின் பிறப்புப் பற்றி இவ்விரு இலக்கியங்களும் முரண்பட்ட தகவல்களைக் கூறுவதற்கு அக்காலத்து வழங்கிய சமயத் தொடர்பான சிந்தனைக் கலப்பே காரணம்.

கலித்தொகை உள்ளிட்ட இம்மூன்று இலக்கியங்களும் தேவார காலத்திற்கு முற்பட்டவை என்பதற்கும் இச்சிந்தனைக் கலப்புகளின் பதிவுகளே உறுதியான சான்றுகளாகின்றன. முருகன் கொற்றவையின் மகனே என்ற சங்க சமூகம் சார்ந்த பெரும்பாணாற்றுபடையின்தெளிவான,தீர்க்கமான அறிவிப்பையும் விடமுடியாமல், அதே சமயம் சமகாலச் சிந்தனைகளின் தாக்கத்தையும் மறுக்கக் கூடாமல் இவ்விலக்கியங்கள் இருகாலத் தரவுகளையும் ஒழுங்குறத் தந்திருக்கும் வரலாற்று நேர்மையைப் பாராட்டாது இருக்க முடியவில்லை.

சங்க காலத்தில் கொற்றவையும், சங்க காலத்தைத் தொடர்ந்தமைந்த காலத்தில் கொற்றவையோடு உமையும் தமிழர்தம் முதன்மைப் பெண்தெய்வங்களாக விளங்கினர். போர்த் தெய்வமான கொற்றவை, போரையே தொழிலாகக் கொண்டிருந்த இனமரபுக் குழுக்களின் ஆட்சியில் முதன்மைத் தெய்வமாக அமைந்ததும், சமுதாய வளர்ச்சி நிலைபெற்ற காலத்து அமைதியான வேளாண் வாழ்க்கையில் உமை ஏற்றம் பெற்றதையும், ஆனால் அதே காலத்தில் ஊரகப் பகுதிகளில் இனமரபுக் குழுக்களின் மாடுபிடிச் சண்டைகள் தொடர்ந்த

நிலையில் அங்குக் கொற்றவை தொடர்ந்து முதன்மையில் இருந்ததையும் சிற்பங்களும் கல்வெட்டுகளும் பின்னால் வந்த இலக்கியங்களும் மிகத் தெளிவாக உணர்த்துகின்றன.

கொற்றவை, உமை, சிவபெருமான் எனும் மூன்று தெய்வங்களுக்கும் இடையில் ஏற்பட்ட பிணைப்பையும், உமையின் வரவால் கொற்றவைக்கு ஏற்பட்டபின்னடைவையும், இப்பின்னடைவையும் தாண்டி ஊரகப் பகுதிகளில் கொற்றவை பெற்றிருந்த ஏற்றத்தையும் சிலப்பதிகாரம் மிக அருமையாகப் பதிவு செய்துள்ளது. பெண்தெய்வ வழிபாட்டின் படிநிலைகளைச் சமுதாயஞ் சார்ந்த சமயப் படப்பிடிப்பாகக் காட்டியிருக்கும் இளங்கோவடிகளின் வரலாற்று நோக்கு வியந்து போற்றற்குரிய ஒன்றாகும்.

சிலப்பதிகாரத்தில் உமை மூன்று இடங்களில் மட்டுமே குறிக்கப்படுகிறார். இம்மூன்றிடங்களிலுமே சிவபெருமானின் ஒரு பாதியாக அவ்வம்மை விளங்கும் செய்திதான் திரும்பத் திரும்பக் கூறப்பட்டுள்ளது.[17] சிவபெருமானின் கோயில்களைச் சுட்டும் இடங்களில் கூட உமைக்கு இடமில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சிலம்பில் சிவபெருமானின் நெற்றிக்கண் நுதல்விழியாகச் சிறப்பிக்கப்படுகிறது.[18] இந்நுதல்விழி பரிபாடலில் கொற்றவைக்கான அடையாளமாகக் கூறப்பட்டிருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.[19] பரிபாடல் கொற்றவையின் நுதல்விழி, சிலப்பதிகார சிவபெருமானுக்கு இடம்பெயர்ந்தாலும், கொற்றவைக்கும் தொடர்ந்து சுட்டப்படுவதையும் சிலப்பதிகாரத்திலேயே பார்க்கமுடிகிறது. காலத்திற்குக் காலம் மாறும் தொன்மங்களுக்கேற்ப இலக்கியங்கள் வளைந்து கொடுப்பது இயல்பாகவே அமைந்துவிடுவதால் வரலாற்றுத் தொடர்ச்சியைக் கண்டறிவதும் சாத்தியமாகிறது.

உமையை மூன்றிடங்களில் மட்டும் சுட்டும் இளங்கோவடிகள், கொற்றவை வழிபாட்டை ஒரு காதையாகவே அமைத்திருக்கிறார். 'வேட்டுவ வரி' என்ற தலைப்பில் அமையும் இக்காதை. காட்டில் அமைந்திருந்த 'ஐயை' என்றழைக்கப்பட்ட கொற்றவைக் கோட்டம் சார்ந்து நிகழ்ந்த மறவர் செயற்பாடுகளை முன்வைக்கிறது. இக்காதையின் தரவுகளைக் கொற்றவையின் தோற்றம், வழிபாட்டு முறை என இரண்டாய்ப் பகுத்துப் பார்ப்பது அக்காலகட்டப் பெண்தெய்வ வழிபாட்டின் தன்மைகளைத் தெளியவும், சிலப்பதிகாரத்தின் காலத்தை உணரவும் வழிகாட்டும்.

கொற்றவைத் தெய்வம் எப்படியிருந்தது என்ற கேள்விக்கு முதன் முதலாகத் சிலப்பதிகாரமே விரிவான விடையிறுக்கிறது. பாம்புக்குட்டி வடிவிலமைந்த தங்க நாணால் கட்டப்பட்ட நெடிய சடை (கரண்டமகுடம்). சடையில் பிறைநிலவெனப் பன்றியின் தந்தம் (சிவபெருமானுக்குரிய குறியீடு). உடன் வெள்ளிய மலரிதழ்கள். நெற்றியில் இமைக்காத கண். பவளம் போல் வாயும் வெண்சிரிப்பும் கொண்டவள். நஞ்சுண்டதால் கருத்த கழுத்தில் புலிப்பல் தாலி, மார்பகங்களைப் பாம்புக் கச்சால் மறைத்தவள். வளைகள் அணிந்த கைகளில் சூலமும் வளைக்கப்பட்ட வில்லும் வெற்றியையுடைய வாளும் சங்கும் சக்கரமும் தாமரையும் கொண்டவள். யானைத் தோல் போர்த்தவள். இடையில் புலித்தோல், சிங்கத்தோல் உடுத்தவள். கால்களில் இடப்புறம் சிலம்பும் வலப்புறம் கழலும் அணிந்தவள். கை வாளால் மகிடனை அழித்து அவன் தலைமீது நின்றவள். சிங்கம், கலைமான் இவள் வாகனங்கள்.

ஓர் ஆகமத்தைப் போலக் கொற்றவையின் வடிவத்தை ஒரு கூறு விடாமல் வண்ணித்துள்ள இளங்கோவடிகள் கொற்றவை வழிபாட்டையும் தெளிவுற விளக்குகிறார். கொற்றவைக் கோட்டத்தில் தேவி கலைமானின்மீது எழுந்தருளியிருந்தார். அவர் திருமேனிக்கு வண்ணம், சந்தனம் பூசப்பெற்றன. அம்மையின் கொடி சிங்கக் கொடி, தேவியின் திருவுருவத்திற்கு முன் பல்வகை மரங்கள் சூழ்ந்த பலித்தளம் இருந்தது. அதில் கொற்றவை தரும் நன்மைகளுக்கு வேட்டுவர் தரும் விலையான மலரும் அவரை, துவரை போன்ற புழுக்குக் கறிகளும் எள்ளின் கசிவும் நிணச்சோறும் பலியுணவாக இடப்பெற்றன. பூ, புகை, வாசனைப் பொருட்கள், பந்து, கழங்கு, பாவை போன்றன வழிபாட்டில் இடம் பெற்றன. கிளி, கானக்கோழி, மயில் ஆகிய பறவைகள் அம்மன் திருமுன் விடப்பட்டன. கொற்றவையை வழிபட்டவர்கள் அம்மையை, அமரி (அலங்கரித்தல் இல்லாதோள்), குமரி (அழியாதோள்) கௌரி, சமரி (போரில் வல்லவள்), சூலி (சூலத்தை உடையவள்) நீலி (நீல நிறமானவள்) எனப் பல பெயர்களால் விளித்து மகிழ்ந்தனர். கொற்றவை திருமாலுக்குத் தங்கையென்றும் கொண்டாடினர். பறை, சின்னம், துத்தரிக் கொம்பு, குழல், மணி முதலிய இசைக்கருவிகள் ஒலித்தன.

வழிபாட்டிற்குப் பிறகு வேட்டுவ மக்கள் பங்கேற்ற கூத்து நடந்தது. அதில் கொற்றவையின் பெருமைகள் பேசப்பட்டன.

1. நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானின் ஒரு பாகத்தை ஆள்பவள்.

2. தன் சடையில் திங்களைக் கொண்டவள்.

3. கானத்தெருமையின் தலைமேல் நிற்பவள்

4. அசுரர் வாட, அமரர்க்காக மரக்கால்களின் மேல் நின்று வாளமலை ஆடியவள்.

5. சிவபெருமான், திருமால், நான்முகன் ஆகிய மூவரின் இதயத்திற்கும் விளக்கானவள்.

6. திருமாலின் தங்கை.

இளங்கோவடிகள் தொகுத்துத் தரும் கொற்றவைச் செய்திகள் அவர் காலகட்டத்தில் தமிழ்நாட்டில் கொற்றவை வழிபாடு மிகச் சிறந்த நிலையிலிருந்ததைத் தெளிவுபடுத்துகின்றன. கொற்றவையை மட்டுமே கொண்டாடிய சங்க காலத்திற்குப் பிறகு வந்த இலக்கியமென்பதால் இதில் உமையும் இடம்பெற்றுள்ளார். சில அறிஞர்கள் கருதுமாறு போல இவ்விலக்கியம் தேவார காலத்திற்குப் பிற்பட்டதாக இருக்குமெனில், இளங்கோவடிகள் கொற்றவைக்குத் தந்த முக்கியத்துவத்தை உமைக்கும் தந்திருப்பார், அல்லது உமையின் பெருமைகள் கொற்றவையை விஞ்சியிருக்கும். இவ்விரண்டும் இல்லாத நிலையில் பரிபாடல், முருகாற்றுப்படை போல சிலப்பதிகாரத்தைத் தேவார காலத்திற்கு முற்பட்ட இலக்கியமாகவே கொள்ளமுடியும். இந்தக் கால நிர்ணயத்தைச் சிலப்பதிகார உள்ளடக்கமே வலியுறுத்திப் பேசுகிறது. உமையின் நுழைவும், கொற்றவையின் பெருமையும் காலக் கட்டாயமாக இவ்விலக்கியத்தில் பதிவாகியுள்ளன.

தொல்காப்பியத்திலேயே கொற்றவை இடம்பெற்றுவிட்ட போதும், அவரை சிவபெருமானின் மனைவியாகச் சிலப்பதிகாரமே முதன்முதலாக நேரடியான முறையில் உறுதிப்படுத்துகிறது.[20] சிவபெருமானின் அத்தனை புறக்குறியீடுகளையும் அம்மை பெற்றுச் சிறக்கிறார். தமிழ்நாட்டு இலக்கிய வரலாற்றில் முதன்முறையாகத் திருமாலின் தங்கையாகக் கொற்றவை அறிமுகமாவதும் சிலப்பதிகாரத்தில்தான்.[21] இத்தனைக்கும் மேலே இன்னும் ஒருபடி கூடுதலாகப் போய் சிவபெருமான், விஷ்ணு, நான்முகன் ஆகிய மூவரின் அகமலருக்கும் கொற்றவையே விளக்காய் நிறைந்ததாகச் சிலப்பதிகாரம் கூறுவதைப்[22] பார்க்கும்போது, சங்க காலத்தைத் தொடர்ந்தமைந்த காலகட்டத்தில் ஆரியஞ் சார்ந்த சமயச் சிந்தனைகளுக்கும் தமிழினஞ் சார்ந்த சமயச் சிந்தனைகளுக்கும் இடையே நிலவிய போட்டி மனப்பான்மையை மிகத் துல்லியமாக

அறியமுடிகிறது. சிலப்பதிகார கால வேட்டுவர்கள், "கண்ணுதலோன் பாகத்து மங்கையுருவாய், மறையேத்தவே நிற்பாய்" என்று முன்னிலைப் பரவலாய் இந்தப் போட்டியின் உச்ச நிலையைப் படம்பிடிக்கிறார்கள். [23] மறைகள் வழிவந்த உமையை ஏற்க விழையாத மண்ணின் மைந்தர்கள், தங்கள் மண்ணோடு மணக்கும் கொற்றவையை அந்த மறைகள் ஏற்றுப் போற்றுவதே முறை எனுமாறு போல இப்பாடலடிகள் கண்சிமிட்டுகின்றன.

தமிழ்ச் சிந்தனைகளுக்கும் உள்நுழைந்த ஆரியச் சிந்தனைகளுக்கும் நிகழ்ந்த உராய்வில் மெல்ல மெல்ல ஆரியச் சிந்தனைகள் வலுப்பெற்றுக் கொற்றவையின் இடத்தை உமைபெற்றாலும், சில காலம் தொடர்ந்து கொற்றவையும் துர்க்கை என்று பெயர்மாறித் தனித்தன்மையுடன் விளங்கியமையைப் பல்லவ, பாண்டியர் காலச் சிற்பங்கள் தெளிவாக உணர்த்துகின்றன. மாமல்லபுரத்திலும், காஞ்சிபுரத்திலும், பனைமலையிலும் சிலப்பதிகார வண்ணனைகளை வடிவங்களாகவே பார்க்கமுடிவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. பல்லவர் பகுதிகளில் துர்க்கையின் சிற்பங்கள் வளமையுற வேர்விட்டமைக்கு வலிமையான காரணமொன்றும் இருந்தது. சங்கத் தொடராய்ப் பல்லவ பூமியில் வெட்சி, கரந்தைப் போர்கள் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கக் காலம் வரை தொடர்ந்து நிகழ்ந்தமையை நூற்றுக்கணக்கில் கிடைத்திருக்கும் பல்லவர் கால நடுகற்கள் உறுதிசெய்கின்றன.[24] கொற்றவையை அறிமுகப்படுத்தும் தொல்காப்பியம்,அம்மையைப் போர்த்தெய்வமாகவே காட்டுவதும், அக்கொற்றவையின். நிலைபோற்றியவர்கள் வெட்சி மறவர்களே என்பதும் இங்கு நினைக்கத்தக்கன.இலக்கியம்,கல்வெட்டு,சிற்பம் எனும் முத்துறைத் தடயங்களும் இக்காலகட்டத்தின் பெண்தெய்வ வழிபாட்டு வரலாற்றை முறையாகப் பதிவுசெய்திடப் பெருந்துணையாகின்றன.

தமிழ்நாட்டுச் சமய வரலாற்றின் அடுத்த இயலையும் இளங்கோவடிகளே எழுதித்தருகிறார். தமிழ்நாட்டு இலக்கியங்கள் அனைத்துமே மிகச்சிறந்த வரலாற்றுக் களங்களென்றாலும் சிலப்பதிகாரம் தனித்தன்மையது. இம்மக்கள் காப்பியம் மதுரைக் காண்டத்தில், பாண்டியன் அரண்மனை வாயிற்காவலன் வாய்மொழியாக அன்றிருந்த சமயச் சிந்தனைகளைப் பிரதிபலித்துள்ளது. இந்த இலக்கியத்தில்தான் முதன்முறையாக 'அன்னையர் எழுவர்' வழிபாட்டுச் சிந்தனையின் விதையைப் பார்க்கமுடிகிறது.

(தொடரும்)

# வாழ்க்கை எதற்காக?

(சிறுவயல். செயமணி)

நீலப் பரப்பெனும் நீண்ட திரையினில்
நித்தம் ஓவியங்கள்
ஜாலக்காரனவன் தன்னை மறைத்தே
செய்யும் சாகசங்கள்

அண்டப் பெருவெளியில் சந்திர சூரிய
அதிசய ஒளிவெள்ளம்
அவை அருகில்போய் நீந்திக் களித்திட
எங்கும் கவி உள்ளம்

கண்ணுக் கெதிரிலும் எத்தனை செடிகொடி
காட்சிக்கு விருந்தாக
வண்ண மலர்களில் எண்ணம் செலுத்தினால்
வாட்டம் பறந்திடுமே

ஓடும் ஆற்றிலும் உருளும் அழகு
உனக்குத் தெரியலையா
ஒரு சிறிதேனும் இயற்கையை இரசிக்கும்
உள்ளம் உனக்கில்லையா

எத்தனை வகையாய் இயற்கையைப் படைத்தான்
இறைவன் நமக்காக
என் துணையேனும் இதைக்காண மறந்தால்பின்
வாழ்க்கை எதற்காக

காசு பணத்துக்கே ஆலாய்ப் பறக்கும்
காரிய உலகத்திலே
கடவுள் படைத்த இயற்கை விருந்தைக்
களித்திட ஆளில்லையே!



(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடி அடிகளாரின் சிறுகதைகள் - ஒரு மதிப்பீடு

(கிருங்கை. சேதுபதி)

அதேபோல, உழைக்கச் சோம்பி அதிருஷ்டத்தின் மீது பேராசை கொண்டு லாட்டரிச் சீட்டால் தம்பொருள் அனைத்தையும் இழந்து அழும் கோவிந்தசாமியைப் பார்த்துக் கனவில் சிரிக்கிறாள் பூமாதேவி. அதோடு, "ஏன் அழுகிறாய்? கவலைப்படுகிறாய்? இதோ உன்முன்னே கிடக்கும் வளமான மண்ணைப் பார்; உன் கைக்கும் நிலத்துக்கும் உழைப்பின் மூலம் உறவுண்டாக்கு. என்னோடு (நிலத்தோடு) உழைப்பின் மூலம் பேசு! நான் அள்ளித் தருகிறேன்!" என்கிறாள்.[3] அவ்வழி உழைத்த கோவிந்தசாமிக்குத் தாம் சொல்லிய வண்ணமே, விளைபொருளை அள்ளிக்கொடுத்து அவன் வாழ்வை வளமுடையதாகவும் ஆக்குகிறாள்.

"இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம் என்னும் நல்லாள் நகும்" (திருக்குறள் - 1040)

என்ற குறளில் இடம்பெறும், "நல்லாள் எனும் சொல்லை விரித்த கதைதான். பூமிதேவியின் சிரிப்பு".

இவை தவிர, நேரடியாகவும், கதைக்குள்ளும் குறட்பாக்களைக் கொண்டுள்ள ஐந்து கதைகளை, "அறிவொளி இயக்கக் கதைகள்" அடக்கியுள்ளன.

"திருக்குறளுக்குப் பொருளை உரைநூலில் இருந்து பெறுவதைவிடவும், அனுபவம் வாயிலாகப் பெறுதலே தகும்" என்றும்,"பேச்சளவில் குறள் கூறிச் செயல் அளவில் மாறுபடும் பிழைப்பு வெட்ககரமானது" என்றும், "பொறிகளின் துறவு, துறவு அல்ல - புலன்களில் துறத்தலே துறவு - பெண்ணை மட்டும் துறக்காது, மானம் புகழ் முதலியவற்றையும் துறத்தலே துறவு" - என்றும் அக்கதைகள் பேசுகின்றன.

"வாழ்க்கைத் துணைநலம்" என்ற அதிகாரக் கருத்துகளை ஒருங்குதிரட்டி, சுந்தரி எனும் பாத்திரமாய் ஆக்கிய கதை "மனைவியின் கடமை" (சுந்தரி என்ற சொல்லுக்கு "அழகி" என்று பொருள்).

காதல் ஒருவனைக் கைப்பிடித்த சுந்தரி அவன் காரியம் யாவினுக்கும் கைகொடுக்கத்தயார்தான். ஆனால் அவனோ – (சிங்காரவேலன்) பொறுப்பற்றவனாய் இருக்கின்றான். படித்தவன்; நல்ல பையன். ஆயினும் உழைக்காமல் உண்ணுபவன். விளைவு கடன்வயப்பட்ட வாழ்க்கை. சுந்தரிக்குத் திருக்குறளின் மீதே வெறுப்பு வந்துவிடுகிறது. இல்வாழ்க்கை அறமாக இல்லாத கவலையில் திருக்குறளையே நம்ப மறுக்கிறாள். எனினும் வம்பளக்க நினைந்து வாயைப்பிடுங்கும் ஊரார்க்கு முன்னால் கணவன் குறித்துப் பெருமையாகவே சொல்கிறாள். பீடன்று என்று சொன்ன கண்ணகி வழியில் நின்று. கடவுளே வந்து கேட்டபோதும், நல்ல பதிலே தருகிறாள். ஏன்? இல்லறம் பிறர்பழிப்பதற்காகப் போய்விடக்கூடாதே என்ற கவலை. மனைவியின் கடமை சொல்லில் சோர்வடையக்கூடாது! என்ற அளவில் கருத்தைச் சொல்லிக் குறளைக் காட்டாத அடிகளார், அதற்குமேலும் கதை சொல்கிறார்.

'ஆனால்' சிங்காரவேலன் திருந்தியபாடில்லை. சுந்தரியே குடும்பத்தை நடத்தினாள். திருக்குறள் மரபுப்படி நடத்தினாள்[4] என்று முடிகிறது கதை.

பெண்ணியம் பேசித் திருவள்ளுவரைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்துவோருக்குப் பதில் தருகிற கதை இது.

ஆடவர்க்கு உயிரான வினையினைத் தனக்கென ஆக்கி, மனையுறை ஆடவர்க்கும்தானே உயிராகிப் பிறர் பழிப்பு இல்லாத நவீன அக வாழ்க்கை மேற்கொள்ளப் புதுமைப்பெண்ணுக்கு வள்ளுவம் வழிகாட்டுகிறது, என்பது இக்கதையின் முடிவு. அவள் நடத்திய "குடும்பக்கலை" அறிய வேண்டுமெனில், இதோ திருக்குறளை எடுத்துப் படியுங்கள்! என்று விளம்பரப் படுத்தாமல், திருக்குறள் மரபுப்படி நடத்தினாள் என்று சொல்லிவிடுகிறார். வாழையடி வாழையென வந்த தமிழ் மரபு – இத்திருக்குறள். மரபு, செயற்கைவயப்பட்ட நகர வாழ்விலிருந்து மாறுபட்ட இயற்கையோடு இயைந்த கிராம வாழ்வில் இயல்பாகிப் போன மரபு. ஒன்றுந்தெரியாத குப்பனைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு, தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்வில்லாது இயங்குகிற குப்பாயி முதலியோர் வழங்கிய மரபு, இது எனப் பாமர மக்களுக்கும் புரியும்படி சொன்னவர் அடிகளார்.

இன்னும் விளக்கமாக, இந்த மரபினைப் புரிந்துகொள்ள வேண்டுமெனில், திருக்குறளுக்கு - திருக்குறளே உரையாவது போல, அடிகளார் எழுத்துக்கு, அடிகளாரின் எழுத்தே உரையாகி நிற்கும், "அன்புச் செல்விக்கு" என்னும் பகுதியினை (தொகுதி - 13-பக்கங்கள், 455-469) எடுத்துப் படிக்கலாம்.

*அறநெறிக் கதைகள்*

பொதுவாக, அருளாளர்கள், அறநெறியாளர்கள் கூறும் கதைகள், "முன்பொரு காலத்தில்" எனத்துவங்கும் பண்டித நடையிலான - புராண - இதிகாச அல்லது கர்ண பரம்பரைக் கதைகளாக செவிவழிக் கதைகளாக இருக்கும். அல்லது ஆன்மிக மேம்பாட்டிற்காக அவர்களே இட்டுக்கட்டிச் சொல்லும் குறியீடு/ உருவகத்தன்மை கொண்ட கதைகளாக இருக்கும். அவற்றுள், கதையம்சத்தை விடவும், மொழிநடையை விடவும் அவரவர் சார்புநிலைக்கேற்ற "உபதேசத்தன்மை" தூக்கலாய்த் தெரியும். அவ்வாறான கதைகளுள் ஒரு துறவியாகவோ, மகானாகவோ, பெரியவராகவோ, சாதுவாகவோ - தமக்குரிய பீடத்தோடு - அக்கதை சொல்லி வெளிப்பட்டு நிற்பார். இது குறையன்று. விமர்சனம். ஆனால் இத்தகு போக்குகள் இல்லாத நவீனத்துவம் வாய்ந்த கதைகளாக அடிகளாரின் கதைகள் அமைகின்றன. பிரச்சாரத்திற்குப் பதிலாக - ஓர் அமைதியான அருளோட்டம் பாய்கிறது. அது சமயம் சார்ந்து அல்ல, மானுடம் தழுவிப் பாய்வது. உலகளாவிய நோக்கில், அதே சமயம், வட்டாரத்தன்மை (மண்ணின் மணம்!) இழவாமல் எழுதுவது.

இத்தகு நவீனத் தமிழ் சிறுகதை மரபுக்கூறுகளோடு அடிகளாரால் எழுதப்பட்ட கதைகள் இரண்டு. ஒன்று, மௌனப் புரட்சி. மற்றொன்று "மங்களகரமான பொங்கல்" மொழிநடை, பாத்திரங்களின் உரையாடல், கதைப்போக்கு, காரண - காரியம், வாதப் பிரதிவாதம் ஆகியவற்றில் அக்கறை கொண்டு எழுதப்பட்டவை அவை.

"மௌனப்புரட்சியில்" அறிஞர் அண்ணாவின் தாக்கத்தையும், "மங்களகரமான பொங்கலில்" ஜெயகாந்தனின் தாக்கத்தையும் கண்டுகொள்ள முடியும். இடையிடையே எழும் எள்ளல் - புதுமைப்பித்தனின் மரபு வழிப்பட்டது.

இத்தகு மரபில் உருவான அறிவொளி இயக்கக் கதைகள் கூர்மை மிக்கவை. வாசகர்பால் அதிக அக்கறைகொண்டு எளிமைப் படப் பேசுபவை. குறுந்தொடரில் வாழ்வின் மேன்மையையும், ஆழத்தையும் உணர்ந்து கொள்ளும்படியாகச் சித்திரமானவை.

வேலை இல்லாத் திண்டாட்டம், வறுமைக் கொடுமை, இயற்கையை நாசமாக்கல், வரதட்சிணைக் கொடுமை, பெண்ணுக்குப் பெண்ணே இழைக்கும் அநீதி, படித்தவர்கள் பண்ணும் சூது, அரசு ஊழியர்களின்/அதிகாரிகளின் மெத்தனப்போக்கு, ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்படும் இன்னல் - முதலிய சமுதாயக் கொடுமைகளுக்கு எதிராக குரல் கொடுக்கும் இக்கதைகள், அவற்றுக்கான மாற்றுக்களையும் வாழ்வியல் போக்கிலேயே வகுத்துச் செல்லும் வலிமை மிக்ககவையாகத் திகழுகின்றன. அறிவொளி இயக்கத்தின் சமுதாயத் தொண்டை மனதில் கொண்டு வாசகர்கள் யாரெனும் தீர்மானத்தோடு வடிவமைக்கப்பட்ட கதைகள் அவை. சான்றுக்கு இரண்டு.

பாலையூர், ஒரு சிற்றூர்! தாழ்த்தப்பட்ட, ஆதி திராவிடர்கள் மட்டுமே வாழும் ஊர்! குடியிருப்பு இட நெருக்கடி. ஒரு வீட்டில் பல குடும்பங்கள்! அவர்கள் வாழ்க்கை நரகம். இத்துயர் நீக்க உதவும் தொண்டர் மயில் வாகனம். அரசு விதிமுறைகளின்படி, அதன் உதவியோடு தரிசு நிலத்தைப் பெற்றுத்தர முயலுகிறார் அவர். அதற்குள் மேட்டுக்குடியினர் இருவருக்கு அந்நிலம் பட்டாவாகிறது. எப்படி? வினாக்கள் எழும்புகின்ற மயில்வாகனம் விடாது முறையிடுகிறார். அவர்தம் முயற்சியைக் கைவிடும்படி வற்புறுத்தல்! அதற்குள் நிலம் அவசரமாக உழப்பெறுகிறது. கோட்டாட்சித் தலைவர் இம் முறைகேட்டைக் கண்டித்து பட்டாவை ரத்து செய்கிறார். நிலச்சுவான்தாரர்கள் மேல் முறையீடு - மயில்வாகனத்தின் குறுக்கீடு.. இறுதியில் நடந்தது என்ன...?

விரிக்க மனமின்றிச் சுருக்கமாய்ப் பின்வருமாறு எழுதி முடிக்கிறார் அடிகளார். "இந்த நிலையில் பணம் பரிமாறப்படுகிறது. சாராயம் தாராளமாக வழங்கப்பெறுகிறது. கூடவே, பயமுறுத்தலும் சேர்கிறது. ஆதிதிராவிடர்கள் சாராய மயக்கத்தில் கையில் கிடைத்த காசுகளுக்காகவும், மிரட்டலுக்கும் பயந்தும், "சாலை

ஓரத்தில் தேர்வு செய்யப்பட்ட இடம் வேண்டாம், பழைய இடமே போதும், வசதியாக இருக்கிறது" என்று எழுதி வாங்கிவிட்டார்கள். வாழ்வாங்கு வாழ்வோர் வெற்றிபெற்றனர்! வாயில்லாப் பூச்சிகள் வாழ்விழந்தனர்!"

[5]இக்கதை நடைபெறும் ஊரின் பெயர் "பாலையூர்" என்பதையும், ஆதிதிராவிடர்கள் - வாயில்லாப் பூச்சிகள் என்ற தொடரால் விளிக்கப்பெறுதலையும் இங்கே கவனத்தில் கொண்டால், இக்கதையின் "கனம்" புரியும்.

இன்னொரு கதை. பாலசுப்பிரமணியம் - அவர் மனைவி திருமகள் தாய் லட்சுமி ஆகிய மூவரைக் கொண்டு பின்னப்பெற்ற கதை. "தாயிற் சிறந்த கோயில் இல்லை" என்ற பழமரபில் திளைத்தவர் பாலசுப்பிரமணியன். அவருக்கு லட்சுமி அன்னையாயினும், அவர் மனைவி திருமகளுக்கு - ஆட்டிப் படைக்கும் மாமியார். பொறுத்துப் பொறுத்து, இரு குழந்தைகளைப் பெற்றபின்னும் - மாமியார் மாறவில்லை. அவர் மகனும் காக்கவில்லை. அடிகளார் எழுதுகிறார்.

மாமியார் முழு அதிகாரம்! அவசரகால அதிகாரத்தைப் பெற்றவள் போல நடக்கிறாள்! கணவனுக்குச் சோறுபோட மனைவிக்கு உரிமை இல்லை. கணவனும் மனைவியும் கூடி மகிழத் தாயின் அனுமதி தேவை! இந்த நிலையில் ஒருநாள் எதிர்பாராத சூழ்நிலையில் திருமகளுக்கு அறிவு பிறந்தது! தெளிவு வந்தது! ஆற்றல் பெற்றாள்! திறமையும் வந்தது.

ஒருநாள் இரவு கணவன் படுத்த பிறகு இரவில் மாமியாரைப் போய் அழைத்தாள்! மாமியும் வந்தாள்! கணவன் படுக்கைக்குப் பக்கத்தில் நிற்க வைத்து மாமியைப் பார்த்து, "இவருக்குத் தாயாக இருந்தீர்கள்; மனைவியாகவும் நீங்களே இருங்கள் என்று சொல்லிவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு வெளியே வந்துவிட்டாள்".

இக்கதை - ஜெயகாந்தனின் அக்னிப்பிரவேசம் மற்றும் யுகசந்தி போலத் தனித்தன்மை கொண்ட அற்புதச் சிறுகதை எனக் கொள்ளத் தயங்கவேண்டியதில்லை.

இக்கதையில் இடம்பெறும் "லட்சுமி, திருமகள்" பாத்திரப்பெயர்கள் கவனிக்கப்படவேண்டியவை. லட்சுமி - வட சொல்; திருமகள் தமிழ்ச்சொல்! இரண்டும் ஒரு பொருள் குறித்தவை. மாமியும் மருமகளும் பெண்ணினம் எனினும்

வேறுவேறான உணர்வும், உயிரும், உடலும், உரிமையும் உடையவர்கள் என்ற கருத்தைச் சொல்வதோடு, "சமஸ்கிருத - தமிழ்" உறவு மாமி, மருமகள் உறவாக மாறிக் கிடப்பதையும், இப்பெயர்கள் சுட்டி நிற்கின்றன.

இவ்வாறாக, 18 கதைகள் அடங்கிய எண் வரிசையிலான - அவற்றின் முடிவில், அக்கதைகளின் பிழிவாக முறையே அறமொழிகள் இடம்பெறுகின்றன. நீதிக்கதைபோன்ற தோற்றத்தை, இவை ஏற்படுத்துவன எனினும், அவை பழைய நீதி பேசுவன அல்ல, மூடப் பழமைக்கு எதிரான முற்போக்குச் சிந்தனைகளை முன்வைத்துச் செயலுக்குத் தூண்டுவன. காலம் மறுதலித்த அறங்களை நிராகரித்துப் புதிய அறங்களைப் போதிப்பன. "நித்தம் நறுமனச்சுடர் தரும் கவித்துவம் மிக்கன".

(தொடரும்)



## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

# மணிவாசகர் பதிப்பகத்தின்

## தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

**7200 - பக்கங்கள் - 16 தொகுதிகள்**

| | |
|---|---|
| திருக்குறள் - தொகுதி I | 75-00 |
| திருக்குறள் - தொகுதி II | 65-00 |
| திருக்குறள் - தொகுதி III | 100-00 |
| திருக்குறள் - தொகுதி IV | 75-00 |
| இலக்கியம் - தொகுதி V | 75-00 |
| இலக்கியம் - தொகுதி VI | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VII | 80-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VIII | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி IX | 75-00 |
| சமயம் - தொகுதி X | 90-00 |
| சமயம் - தொகுதி XI | 100-00 |
| சமயம் - தொகுதி XII | 125-00 |
| பொது - தொகுதி XIII | 140-00 |
| பொது - தொகுதி XIV | 125-00 |
| பொது - தொகுதி XV | 120-00 |
| பொது - தொகுதி XVI | 140-00 |



**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை
சென்னை - 600 108.

பதிவு எண் : TN/SP/KKD-01/2003-2005 மக்கள் சிந்தனை ஏப்ரல் / 2004 வெளியீட்டு நாள் 20.04.200




பெறுநர்

ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர் - (Post)
காரைக்குடி - (Via)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம் காரைக்குடி. ✆ : 264166